


உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# சித்தாந்தம்ரபட்டவணை.

ஆனைமுக னறுமுக னம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியையுள் நாடு.

* "ஏகனனேகனிருள்கருமமாயையிரண்டாக விவையாறு தியல்." ஏகனென்பது சிவன், அனேகனென்பதுஆத்மா, இருளென்பதுஆணவமலம், கருமமென்பது கன்மமலம், மாயை யிரண்டென்பது சுத்தமாயையும் அசுத்தமாயையும், இவ் வாறுபொருளு மொருகாலத்திலேயுண்டாகாமலனுதியிலேயுள்ளபொருள்களாம். ஆறுபொருளையுந் திரிபதார்த்தத்திலடைக்கித் திரிபதார்த்தமாகச்சொல்லுதலுமாம. சிவனுக்கெண்ணிறந்த தன்னியல் புக்குணமுண்டு. அவற்றுளிரண்டுகுணஞ் சொல்லுகிறோம் அவையாவன, ஒருவருமறிவியாமற்றானே அறிகிற குணமொன்று ஆத்மாக்களுக்கறிவிக்கிற குணமொன்று ஆகவிரண்டு. இதற்குவசனஞ்சித்தியார் "பொறிபுலன்கரணமெல்லா" மென்றது.

* இத்திருக்குறள்திருவருட் பயனிலுள்ளது.

ஆத்மாவுக்கு மெண்ணிறந்த தன்னியல்புக்குணமுண்டு அவற்றுள், இரண்டுகுணஞ் சொல்லுகிறோம். அவையாவன, அறிவித்தாலறிகிற குணமொன்று பிறருக்கறிவிக்கமாட்டாத குணமொன்று ஆக - உ "அறிவிக்கவன்றியறி யாவுளங்கள்" என்றது. ஆணவமலத்திற்கெண்ணிறந்ததன்னியல்புக் குணமுண்டுஅவற்றுள் இரண்டுகுணஞ் சொல்லுகிறோம். அவையாவன, ஆத்மாக்களுக்குவேண்டுங் காரியத்தை மறைக்கிறகுணமொன்று வேண்டாதகாரியத்திலே விருப்பத்தைக் கொடுக்கிற குணமொன்று ஆக - உ. இதற்குவசனம் "அன்னியமானவை யுணர்த்தி"என்றது. கன்மமலத்துக்கெண்ணிறந்த தன்னியல்புக்குணமுண்டு அவற்றுள்இரண்டுகுணஞ்சொல்லுகிறோம். அவையாவன, ஆத்மா மலத்தைப் பொருந்தினல் மலமாய்ப்போகிற குணமொன்று சிவத்தைப்பொருந்தினல் சிவமாய்ப்போகிற குணமொன்று ஆக-உ. மாயைக்கெண்ணிறந்ததன்னியல்புக்குணமுண்டு. அவையாவன, ஆத்மா ஆணவமலத்தைப்பொருந்தினல் மலமாய்ப் போகிற குணமொன்று, ஆத்மா சிவத்தைப்பொருந்தினல் சிவமாய்ப் போகிற குணமொன்று ஆக-உ. இதற்குவசனம் "மாயைமாமாயை" என்றது. இவைதன்னியல்பு ஆத்மாக்கள் அனுதியிலே ஆணவ மலத்தைப்பிடித்தார்கள் ஆணவமலமாத்மாக்களுக்குக்கன்மத்திலே விருப்பத்தைக்கொடுத்தது அந்தச்செய்தியைக் கர்த்தா விரக்கத்தினலே யறிந்து விருப்பத்துக்கேற்ற தனுவைக்கொடுத்து அந்தத்தனுவினிடமாகக் கன்மத்தைக்கூட்டிப்புசிப்பித்தார். இது அனுதியிலே பிரபஞ்சமுண்டானமுறைமை. இவை பொது வியல்பு. ஆத்மாவுக்கு ஆணவமலமியற்கையோ செயற்கையோ இயற்கையானல்

பாலுக்கு வெண்மையுங் கரிக்குக் கருமையு மொருகாலத்துநீங்காதது போல் ஆத்மாவுக்கு ஆணவமலமொருகாலத்தும்நீங்காது,ஆகையாலே வியற்கையன்று. செயற்கையானல் வெள்ளைப்புடவைக் கழுக்கேறு கிறதுபோல மோட்சத்திலும் வந்துபொருந்த மாகையினலே செயற்கையு மன்று ஆனுற் சித்தாந்த மெப்படியென்னில்; நெல்லுக்குமியும் செம்புக்குக்களிம்பும் நீருக்குத்தட்பமும் அனுதிசெயற்கை அனுதிசை யோகமென்பதுமாம். என்றுரைத்ததற்குவசனம் "நெல்லுக்குமியு" மென்றது. (க)

ஆத்மாவுக்கனுதியிலேயே ஆணவமலத்தைக் கர்த்தாகூட்டினனே? மலந்தானே வந்துபிடித்ததோ? கர்த்தா நின்மலராய் சர்வானுக்கிரக ராகையினலே கர்த்தாகூட்டினதன்று. ஆணவமலஞ்சடமாகையால் தானேவந்து பிடிக்க மாட்டாது. ஆனல்வேதாகமங்களிலெப்படி யென்னில் ; ஆத்மாவே ஆணவமலத்தைப் பிடித்தானென்றறிக. இதற்கு வசனம். "எண்ணறிதாய் நித்தமா யிருண்மலத்துளழுந்தி" யென்றது. (உ)

ஆத்மாவுக்குச் செய்தியுண்டோ வில்லையோ? ஆத்மாச்சுதந்தர வீனனகையாலே சிவனுக்கே செய்தியல்லாமல் ஆத்மாவுக்குச் செய்தியில்லை. என்றல் ஆத்மாவுக்கு நரகதண்டனை யுண்டாகவேண்டுவதில்லை, வேதாகமங்களிலே விதிவிலக்குச் சொல்ல வேண்டுவதில்லை, ஆத்மாவுக்கு நரகதண்டனை யுண்டாயிருக்கிறபடியினலேயும் வேதாகமங்களிலே விதிவிலக்குச் சொல்லியிருக்கிறபடியினலேயும் ஆத்மாவுக்குச் செய்தியுண்டு இதற்கு வசனம்,"அருளினலுரைத்த நூலின்வழிவாராததன்மஞ் செய்யி" னென்றது. (ங)

ஆத்மாவுக்குக் கன்மத்திலே யுண்டாகிய விருப்பஞ் சிவன் கொடுத்தவிருப்பமோ? ஆத்மாவுக்குள்ளவிருப்பமோ? சிவன்கொடுத்த விருப்பமானால் தீவினை செய்வித்து நரகத்திலே போடார். நரகத்தி லேபோட்டுத் தண்டிக்கையினாலேயும், ஆத்மாவுக்குக் கன்மத்திலே நிவர்த்திவந்த காலத்திலே கெடாதபடியினாலேயும், சிவன்கொடுத்த விருப்பமன்று. ஆத்மாவுக்குள்ள விருப்பமானால் நல்வினையிருக்க தீவினையைச்செய்து நரகத்திலே போகையினாலே ஆத்மாவுக்குள்ள விருப்பமுமன்று அதெப்படியென்னில்; ஆணவமலஞ் சடமாகையி னாலே ஆணவமலத்துக்கொரு செய்தியுமில்லை. என்றால், விஷம், கள்ளு, பாஷாணந், தீ, காற்று, நீர் முதலிய சடங்களுக்குச் செய்தியுண் டானாற்போல் ஆணவமலமாகிய சடத்துக்குச் செய்தியுண்டு ஆகை யினாலே ஆணவமலமே ஆத்மாவுக்குக் கன்மத்திலே விருப்பத்தைக் கொடுத்தது. விருப்பத்தைக்கொடுத்த ஆணவமலமும் ஆத்மாவுக்குக் கன்மத்தை யறிந்தெடுத்துக்கொடுக்கமாட்டாது. விரும்பின ஆத்மா வுங்கன்மத்தையறிந்து எடுத்துக்கொண்டு புசிக்கமாட்டாது. விரும் பப்பட்ட கன்மமு மாத்மாவையறிந்துவந்து பொருந்தமாட்டாது. இந்தச்செய்தியைக் கர்த்தா விரக்கத்தினாலேயறிந்து விருப்பத்துக் கேற்றதனுவைக்கொடுத்து அந்தத்தனுவினிடமாகக் கன்மத்தைக் கூட்டிப்புசிப்பிப்பார் ஆணவமலமே ஆத்மாவுக்குக்கன்மத்திலே விரு ப்பத்தைக்கொடுத்ததென்பதற்குக் குழந்தை, பிணியாளன்முதலிய வுவமைகள்வருமாறு:—

குழந்தைக்குப் பாலிலே யுண்டாகிய விருப்பந் தாய்கொ டுத்தவிருப்பமோ? குழைந்தைக்குள்ள விருப்பமோ? தாய்கொடுத்

தவிருப்பமானல் தாயானவள் பால்கொடுத்த நேரமெல்லாங் குடிக்கவேண்டும். அப்படிக்குடியாத படியினலே தாய்கொடுத்தவிருப்பமன்று, குழந்தைக்குள்ள விருப்பமானல் எந்நேரமுங் குடிக்கவேண்டும். அப்படிக்குடியாதபடியினலே குழந்தைக்குள்ள விருப்பமுமன்று. ஆனலெப்படியென்னில்; அப்பசியே குழந்தைக்குப்பாலிலே விருப்பத்தைக்கொடுத்தது, விருப்பத்தைக்கொடுத்த பசியுங் குழந்தைக்குப் பாலையறிந்தெடுத்துக் கொடுக்க மாட்டாது, விரும்பின குழந்தையும் பாலையறிந்து எடுத்துக் குடிக்கமாட்டாது, விரும்பப்பட்டபாலுங் குழந்தைவாயிலே அறிந்துவந்து புகுதமாட்டாது. இந்தச்செய்தியைத் தாயானவள் இரக்கத்தினலேயறிந்து பாலையெடுத்துப்பாலாடையிலேவிட்டுக் கொடுப்பாள். குழந்தையொன்று, பசியொன்று, பாலொன்று, பாலடையொன்று, தாயொன்று ஆக-ரு. குழந்தையைப்போலும் ஆத்மா, பசியைப்போலும் ஆணவமலம், பாலைப்போலும் கன்மம், பாலடைப்போலுஞ் சரீரம், தாயைப்போலும் சிவன், பிணியாளனுக்கு மிப்படி ஒட்டிக்கொள்க. (௪)

ஆத்மாவுக்குச்சரீரத்திலேயுண்டாகிய விருப்பஞ்சிவன்கொடுத்தவிருப்பமோ? ஆத்மாவுக்குள்ளவிருப்பமோ? சிவன்கொடுத்தவிருப்பமானல் அவர்சரீரங்கொடுத்தபோதெல்லாம்பற்றவேண்டும், அப்படிபற்றாதபடியினலேசிவன்கொடுத்தவிருப்பமன்று, ஆத்மாவுக்குள்ளவிருப்பமானல்சரீரத்திலிடைவிடாமல்பற்றிக் கொண்டிருக்கவேண்டும், அப்படிபற்றாதபடியினலே ஆத்மாவுக்குள்ளவிருப்பமுமன்று. ஆனலெப்படியென்னில்; ஆணவமலமே ஆத்மாவுக்குச்சரீரத்திலே விருப்

பத்தைக்கொடுத்தது,விருப்பத்தைக்கொடுத்த ஆணவமலம் ஆத்மாவுக்குச் சரீரத்தையறிந்தெடுத்துக்கொடுக்கமாட்டாது. விரும்பின ஆத்மா சரீரத்தை யறிந்தெடுத்துக்கொள்ளமாட்டாது விரும்பப்பட்ட சரீரமும்ஆத்மாவையறிந்தவந்துபொருந்தமாட்டாது.இந்தச்செய்தியைக் கர்த்தர் இரக்கத்தினலேயறிந்து அவன் விரும்பின சரீரத்தைக்கொடுத்துவிரும்பினஇடங்களிலே கொண்டுபோய் வைத்துவிரும்பியகன்மங்களைக்கூட்டிப்புசிப்பிப்பார் ஆத்மாவுக் காணவமலமே சரீரத்திலே விருப்பத்தைக் கொடுத்ததென்பதற்குக் குருடன்முதலிய வுவமைகள் வருமாறு:—

குருடனுக்குக் கோலிலே யுண்டானவிச்சை கோல் கொடுத்திழுக்கிறவன் இச்சையோ? குருடனுக்குள்ளவிச்சையோ? கோல்கொடுத்திழுக்கிறவன் கொடுத்த விச்சையானல் அவன் கோல்கொடுத்தபொழுதெல்லாம் பிடிக்கவேண்டும்,அப்படிப்பிடியாத படியினலே அவன் கொடுத்த விச்சையன்று, குருடனுக்குள்ள விச்சையானல் கோலையிடைவிடாமற்பிடித்துக்கொள்ளவேண்டும், அப்படிப்பிடியாதபடியினலேகுருடனுக்குள்ளவிச்சையன்றுஆனல்,எப்படியென்னில்;குருடே குருடனுக்குக் கோலிலேயிச்சையைக்கொடுத்தது இச்சையைக்கொடுத்தகுருடுங்குருடனுக்குக் கோலையறிந்தெடுத்துக்கொடுக்கமாட்டாது, இச்சித்தகுருடனுங் கோலை யறிந்தெடுத்துக் கொள்ளமாட்டான்,இச்சிக்கப்பட்டகோலுங் குருடன் கையிலேபரிந்தவந்துபொருந்தமாட்டாது,இந்தச்செய்தியைக் குருடனுக்குரிமையுள்ளவர்க ளிரக்கத்தினலேயறிந்து கோலையெடுத்து அவன்கொண்டுபோய் விடச்சொன்ன விடத்திலே கோலைப்பிடித்திழுத்துக் கொண்டுபோய் விடுவார்கள். குரு

டனென்று குருடனொன்று கோலொன்று கோலிழுக்கிறவனென்று இடமொன்றுஆக-டு. குருடனைப்போலும்ஆத்மா,குருட்டைப்போலும் ஆணவம், கோலைப்போலும் சரீரம், கோல்கொடுத்திழுக்கிறவன்போலுஞ்சிவன், இடத்தைபோலும் புவனங்கள், ஆக - ரு.

ஆத்மாமுதல்வனோ? சிவன்முதல்வனோ? சிவன்முதல்வனனால்ஆத்மாவுக்குத்தனுகரணதியிலே விருப்பமிருக்கையிலே மோட்சந்தருகிறேனென்றழைத்தால்அவர்வழியே செல்வானகையினலே சிவன்முதல்வனல்லன். ஆத்மா விரும்பினபடிதனுகரணதிகளைக்கூட்டிக் கன்மத்தைப்புசிப்பிக்கிறபடியினலே ஆத்மாவே முதல்வன். இது எப்படிப்போலவென்றல்குருடன்முதல்வனே? கோல்பிடித் திழுக்கிறவன் முதல்வனோ? கோலைப்பிடித்திழுக்கிறவன் முதல்வனனல் குருடனுக்குக் குளக்கரை போகவேண்டுமென்று இச்சை யிருக்கையிலே கோல்காட்டிக் கோவிலுக்குவாவென்றழைத்தால் வாரான். ஆகையினலே கோல்காட்டி முதல்வனல்லன் குருடன் நினைத்தப்படி குளக்கரையிலே கொண்டுபோய்விடுகையினலே குருடனே முதல்வன். (௬)

ஆணவமலந் தன்னைப்பிடித்தவனை மயக்கும் பிடியாதவனை மயக்காதென்பதற்குவமை, ஒரு விடனனவன் ஒரு வேசியைப்பார்த்தவிடத்து அவள் அவனை மயக்கிறதுபோலும் சன்னியாசிகள் வேசியைப்பார்த்தபோது அவர்களை அவள் மயக்காததுபோலும். (எ)

குயவன் பாண்டங்களை வனையுமிடத்துத் தன்னுடைய நினைவின்படி வனைவானே? பிறருடைய நினைவின்படி வனைவானே?

தன்னுடைய நினைவின்படிவனைவானேயாகில் ஒருவடிவாக வனைய வேண்டும் அப்படிவனையாமற் பலவடிவாக வனைகிறபடியினாலே தன்னுடைய நினைவின்படி வனைவானல்லன் பிறருடைய நினைவின்படியேவனைவான். குயவனொன்று மண்ணொன்று பாண்டமொன்றுபிறரொன்று ஆக - ச, குயவனைப்போலும் சிவன், மண்ணைப்போலும் மாயை, பாண்டத்தைப்போலும்சரீரம், பிறரைப்போலும்ஆத்மாக்கள். முன் சிவன் சரீரத்தைப் படைக்குமிடத்துத் தம்முடைய நினைவின்படி படைப்பானோ? ஆத்மாக்களின்நினைவின்படி படைப்பானோ? தன்னுடைய நினைவின்படிபடைப்பானானால் ஒருவடிவாகப் படைக்கவேண்டும் அப்படிப் படையாமல் பலவடிவாகப்படைக்கிற படியினாலே தம்முடைய நினைவின்படி படைக்கிறவரல்ல ஆத்மாக்களுடைய நினைவின்படியே படைப்பார். (அ)

வண்ணானவன் புடைவையிலே யுள்ள அழுக்கை யுவர் சாணியூட்டிப்போக்குகிறதுபோலச் சிவனானவர்ஆத்மாவினிடத்திலேயிருக்கிறஆணவமலத்தை மாயாகருவிகளைக் கூட்டிப்போக்குவார். (கூ)

மலபரிபாகமாவது, மலம் ஆணவமலம்,பரியுபசர்க்கம், பாகம் திரிவு கெடுதலுமாம். ஆத்மாவுக்குப் பக்குவம்வந்தகாலத்திலே மலசத்தியானது ஆத்மஞானத்தை மறையாதிருத்தலாம். (க0)

சத்திநிபாதமாவது சத்தி சிவசத்தி, நி யுபசர்க்கம், பாதம்விழுதல் பதிதலுமாம். மலம் நீங்கியுயிரைச் சிவசத்திவிழுங்கித்தோன்றுதல். (கக)

இருவினை ஒப்பாவது, உலகத்தார் திரணம் பதர்முதலானப தார்த்தங்களைவிருப்புவெறுப்பின்றிக்கண்டாற்போலப் பக்குவவாத்மா வானவன் நல்வினையிலுந்தீவினையிலும் விருப்பு வெறுப்பின்றிக்கா ண்டல். உலகத்திலேஎல்லாரும்விரும்பப்பட்டபதார்த்தங்கள் பொன் வெள்ளி செல்வம் பெண் பால் தயிர் நெய் சந்தனமுதலியன. வெறுக் கப்பட்ட பதார்த்தங்கள் புலி கரடி பாம்பு தேள் நட்டுவக்காலி தரி த்திரம் வியாதிமுதலாயின. விருப்பும் வெறுப்பு மில்லாத பதார்த் தங்கள் பதர் திரணமுதலாயின. இருவினையொப்புக்கு இன்னமொரு வுவமைவருமாறு:— ஒருவன் வைப்பாட்டிக்குவேண்டிய ஆடையாப ரணங்களும் வீடும் புசிப்பும் கொடுத்து அவள் வீட்டிலே பதினைந்து நாளும், குடியிலுள்ளாளுக்கு வேண்டிய ஆடையாபரணங்களும் புசிப்புங் கொடுத்து அவள்வீட்டிலே பதினைந்துநாளும் இருந்து புசித்துவருகையில், இல்லறநூல் கேட்டுக் கற்புடைய மனைவி யுடனே கூடியிருந்து இல்லறஞ் செய்கிறதே முக்கியமென்றறிந்து வைப்பாட்டியை யிழந்து அவள்மேலே முன் ஒரு ஈ யிருக்கப்பொறு தவன் அவளைப் பள்ளர் முதலியோர் பிடித்திழுத்தவிடத்தும் விருப் பின்றி விட்டு நீங்கி, இல்லாளோடுங் கூடி இல்லற தருமம் நெடுநாட் செய்து கொண்டு வருகிற நாளையிலே, துறவறநூல் கேட்டுத் துற வறமே முக்கிய மென்றறிந்து, குடியிலுள்ள வில்லாளையும் வைப் பாட்டியைப்போலக் கண்டு விட்டு நீங்கி, அவ்விருவரையும் விருப்பு வெறுப்பின்றிக் காண்டல்போல ஒருவன் பாவமும் புண்ணியமுஞ் செய்து கொண்டுவருகையிலே அறநூல் கேட்டுப் புண்ணியமே மு க்கியமென்றறிந்து பாவத்தைத் திங்கென்றறிந்து விட்டு நீங்கி நெடுங்

காலம் புண்ணியமே செய்து கொண்டுவருகையிலே ஞானசாத்திரத்தைக் கேட்டு ஞானமே முக்கியமென்றறிந்து புண்ணியமுஞ் செனன மரணத்தைக்கொடுக்கையினாலே அதுவும் பாவத்தைப் போலத்தீங்கென்றறிந்து விட்டு நீங்கி அவ்விரண்டினையும் விருப்பு வெறுப்பின்றிக்காண்டல். (கஉ)

சிவன் தானே ஆசாரிய மூர்த்தமாய்த் திருமேனிகொண்டு வருவரென்பதற்குப் பலகுற்றங்களுள. அவையாவன ஒருவர் ஆசாரியரான ஆத்மாவானது பிதாவினுடைய உதரத்திலே இரண்டுமாசமிருந்து, பிதாவானவன் தன்னுடைய மனைவியுடனே சையோக காலத்திலே அவள்வழியே புகுந்து, மாதாவினுடைய வயற்றிலே கருப்பாசயத்திலே பத்துமாசங் கட்டுப் பட்டுக் கிடந்து, பிறகு பூமியிலேபிறந்து, மலமூத்திராதிகளை அணைந்து கிடந்து, வளர்ந்து ஒரு வாத்தியாரையடைந்து, தண்டனைப்பட்டு அக்ஷர அப்பியாசம் பண்ணி, பின்வித்து வானிடத்திலே அவனுக் கேவல் செய்து, வித்தியாப் பியாசம் பண்ணிப்பின்பொரு ஆசாரியாரையடைந்து சமைய விசேட நிருவாண அபிடேகம் பண்ணிக்கொண்டு, இன்னான் மகன் இன்னானென்றறிந்து க்ஷயங் குட்டம்முதலாகிய வியாதிகளையடைந்து,மரணம்முதலாயினவன்றி "யம்மாயாவுருவன்மாயாவுருவினையே யானே யந்தவரேமமனோரே" என்றிருக்கிறபடியினாலேபிறவாமுதல்வன் பிறந்தானென்றும் உணர்வாய்நின்ற ஞானக்கூத்தனொருமூர்த்தியொடுகுறுகி யென்றும் மன்னுமருட்குருவாகி யென்றுமிருக்கிற வசனங்களுக் கெல்லாம் விரோதமுண்டெனிற் கூறுதும், கர்த்தா ஆசாரிய மூர்த்தமாய்த் திருமேனி கொண்டுவருதலாவது, மலம் நீங்

கின உயிரிலே சிவஞானம் வெளிப்பட்டு விளங்கித் தோன்றுதல். ஆகையினலே குற்றமில்லையென வறிக. பஞ்ச கிருத்தியம் ஆத்மாவுக்கென்றல் .ஆத்மா நித்தியமானபடியினலே சிருட்டியுந்திதியுஞ் சங்காரமுங் கூடாது. ஆகையினலே ஆத்மாவுக்கன்று. சரீரத்துக்கென்றல் சரீரஞ்சடமாகையினலே திரோபவமும் அனுக்கிரகமுங்கூடாது. இனிச்சித்தாந்த மெப்படியென்னில் "அழிப்பிளைப்பாற்றலாக்க" மென்கிற வசனத்திலுஞ் சிருட்டி திதி சங்காரமூன்றுஞ் சரீரத்துக் குண்டாயிருந்தாலும் மூன்றினலே யுண்டாகிய சுகதுக்கக்களுந் திரோபவ அனுக்கிரகங்களும் ஆத்மாவுக்கே உண்டாகையினலும் ஆத்மாவைக்குறித்தே பஞ்சகிருத்திய மென்றறிக.()

சீடனுக்கு ஆசாரியர் சன்னிதானத்திலே வந்தபின் மலநீக்கமோ? வருமுன் மலநீக்கமோ? வந்தபிறகுமலநீக்கமானல் வந்தவருக் கெல்லாம் நீங்கவேண்டும். அப்படி நீங்காத படியினலேவருமுன்னே மலம்நீங்கினதாம் வருமுன்னே மலம் நீங்கினல் ஆசாரியர் வேண்டுவதில்லையென்னில் அதுகூடாது படலம் நீங்கின கண்ணுக்கு ஆதித்தன் காட்டுவது போல் மலம் நீங்கினபக்கு வாத்மாவுக்குஆசாரியரறி விப்பா ராகையினலே நீசொன்னது கூடாது. (கச)

சுருதிகுருவாக்குச் சுவாநு பவமூன்றினுள் முதன்மையாதென்னில் சுருதியுங் குருவாக்குஞ் சுவாநுபவத்திற்குக் கருவியாதலின் சுவாநுபவமே முதன்மை. (கரு)

ஆத்துமாநித்தியனுயிருக்க பிறந்தானிறந்தானென்னும்வேதாகமஞ்சொல்லுகிறதெப்படியென்றல்; ஆத்மாமாயாகருவியைப் புற்றி

ஆத்மபோதத்தையறிந்தால் பிறப்பு. மாயாகருவியைநீங்கிப் பிறவாமையே யிறப்பு. (கசு)

பஞ்சகிருத்தியம் நித்தியமோ? அநித்தியமோ? சித்தியார் ஐந்தாஞ்சூத்திரதில் "உயிர் கட்கெல்லாம் விரிந்திடுமெறிவு காட்டி வீட்டையு மளிப்பன்மேலோ" னென்று திருவுளம் பற்றி யிருக்கையினாலே பஞ்சகிருத்தியம் நித்தியம். சித்தியார் ஆறுஞ்சூத்திரத்தில் "ஒன்றென்றும், தணவாதகருமமென்றும்" என்றசெய்யுளில் நித்தியமாகத் திருவுளம்பற்றினது. நித்தியப் பலவாதலா லவற்றிலொன்றிலடங்கும். (கஎ)

பஞ்சகிருத்தியம் ஆத்மாவுக்கோ? சரீரத்துக்கோ? நித்தியமாயிருக்கிற ஆத்மாவுக்குக் கூடாது சரீரத்துக் கெனில் சரீரஞ் சிருட்டிதிதிசங்காரமாகிய முத்தொழிற்படு மிடத்தும் ஆத்மா அதிலழுந்து கையினாலும் திரோபவமுமனுக்கிரகமுஞ் சரீரத்துக் கல்லாதபடியினாலும் பஞ்சகிருத்தியம் ஆத்மாவுக் கேயாம். ஆத்மா பஞ்சகிருத்தியமடைவதாவது, ஆத்மாவுக்கறிதற்றொழிலுண்டானதே சிருட்டி, ஆத்மாவுக்கறிதற்றொழினித்தலே திதி, ஆத்மாவுக்கறிதற்றொழில் நீக்கினதே சங்காரம், ஆத்மா யின்பதுன்பங்களைப் புசித்துப் புண்ணியபாவங்களைக் கழித்தலே அனுக்கிரகம். (கஅ)

ஒளியுமிருளுமோரிடத்திற் கூடியிராதது போல் ஆத்மாவினிடத்திலே ஆணவமலமுஞ் சிவமுங்கூடியிராதே கூடியிருக்கிறதெப்படியென்னில், ஒருமரத்தினிடத்திலே வேர்தொடுத்து நுனிபரியந்தம் ஈரமுமக்கினியுங் கூடியிருத்தல் போலும். (கக)

ஆத்மா நரகத்திலே கிடந்து அநுபவிக்கு மிடத்து அந்த நரகவேதனை ஆத்மாவை விட்டு நீங்காத சிவனுக்கு முண்டென்னில் அதுகூடாது எப்படி யெனில் ஆதித்தப்பிரகாசம் படிகவொளியிலே கலந்து வர்ணங்களையறிவித்து தான்பற்றாத வாறுபோலும். ஆதித்தப்பிரகாசங்கண்ணொளியாலே கலந்து நின்று விஷயங்களைக் காண்பித்துத் தான்காணாதவாறுபோலும் ஒருவன் வயற்றிலே கிடக்கிற புழு படுந்துன்பமெல்லா மவனுக்கில்லாதது போலும். (உ௦)

ஆத்மா கிஞ்சிஞ்ஞனோ சுதந்தரவீனனோ கிஞ்சிஞ்ஞனெனில்மின்மினிப்புழுவுக்குப் பிரகாசிக்குஞ் சுதந்தரமுஞ் சிறிதுண்டானாற்போல ஆத்மாவுக்குத்தானே யறியுஞ் சுதந்தரஞ் சிறிதுண்டாகவேண்டும். அப்படி யில்லாதபடியினாலே கேவலங் கிஞ்சிஞ்ஞனல்லன் சுதந்தர வீனனென்றால் சிவனுபதேசித்த ஆகமமெல்லாத்தையு மேக்காலத்திலே யறிந்தெடுத்துக் கொள்ள வேண்டும் அப்படியில்லாத படியினாலே கேவலஞ் சுதந்தர வீனனல்லன் ஆகையினாலே ஆத்மா கிஞ்சிஞ்ஞத்துவத்தையுடைய சுதந்தர வீனனும்.(உக)

ஆத்மா மோக்ஷத்தை யடையுமிடத்துக் கெட்டுக்கூடுமோ கெடாதுகூடுமோ ஆத்மா கெட்டாலுங் கூடமாட்டாது. கெடாதிருந்தாலுங் கூடமாட்டாது. இனிச் சித்தாந்த மெப்படி யென்னில், விடயங்களிலே செல்லும் ஆத்மபோதம் நிகழ்ச்சிக்கெட்டுக் கூடுமெனக்கொள்க. (உஉ)

வியாபகம், வியாத்தி, வியாப்பியம் ஆக-௩. வியாபகம், நிறைவு, வியாத்தி, சமநிறைவு, வியாப்பியம் ஒன்றிலே ஒன்றடங்கி நின்றநிறைவு ஒன்றிலே யொன்றடங்கி யிருத்தல் எப்படியென்னில்; சமுத்திரம், வியாபகம், தண்ணீருமுப்புங்கலந்திருத்தல் வியாத்தி, சமுத்திரத்திலே தண்ணீருமுப்பு மடங்கியிருத்தல் வியாப்பியம், சிவனுடைய வியாபகத்திலே சிவசத்தி வியாப்பியம், சிவசத்தியிலே ஆத்மாவுமலமும் வியாப்பியம், ஆத்மாவிலே ஆத்மசத்தி வியாப்பியம், மலத்திலே மலசத்தி வியாப்பியம் ஆத்மபோதத்திலே மாயை வியாப்பியம் மாயையிலே மாயாகாரியம் வியாப்பியம் மாயாகாரியத்திலே கன்மம் வியாப்பியம் கன்மத்திலே கன்மகாரியம் வியாப்பியம் எனவறிக. சிவனுடையவியாபகம் சமுத்திர வியாபகம் போலும் ஆத்மாவும் ஆணவமலமும் வியாத்தியாயிருத்தல் தண்ணீருமுப்பும் வியாத்தியாயிருத்தல் போலுஞ் சிவனுடைய வியாபகத்திலே ஆத்மாவும் ஆணவமலமும் வியாப்பியமாயிருத்தல் சமுத்திர வியாபகத்திலே தண்ணீருமுப்பும் வியாப்பியமாயிருத்தல்போலும். (உ௩)

ஆத்மா வியாபகத்துக்கு, கண்முதலிய வுவமைகள் வருமாறு:— கண்-க, கண்ணொளி-க, கண்ணொளிக்குக்காணும் குணம்-க, கண்ணொளிக்குக் காணுந் தொழில்-க, இருள்-க, பதார்த்தம்-க, விளக்கு-க, விளக்கையுண்டாக்கினவன்-க, ஆக-அ, கண்ணைப்போலும் ஆத்மா, கண்ணொளியைப்போலும் ஆத்மஞானம், கண்ணொளிக்குக் காணுங் குணத்தைப்போலும் ஆத்மஞானத்துக்கறியுங்கு

ணம், கண்ணொளிக்குக்காணுந் தொழில்போலும் ஆத்மஞானத்துக் கறியுந்தொழில், இருளைப்போலும் ஆணவமலம் பதார்த்தங்களைப் போலுஞ் சுகதுக்கங்கள், விளக்கைப்போலும் மாயாசரீரம், விளக்கை யுண்டாக்குகிறவனைப்போலுஞ் சிவன். விளக்குப்போனவிடத்துக்காணுந் தொழில் ஒன்றுமே போனது, போனபொருளிரண்டு இருக்கிற பொருளாறு ஆக-அ. (உச)

ஆத்மா வியாபகமாயிருந்து சரீரத்தைப் பற்றுதற்குப் படிகமலை, அக்கினிமலை முதலிய வுவமைகள் வருமாறு:—படிகமலை-க படிகமலைக்கொளி-க, படிகமலை யொளிக்குப் பற்றுங்குணம்-க, படிகமலை யொளிக்குப் பற்றுந்தொழில்-க, வர்ணம்-க, வர்ணத்தைக்காண்பிக்கிறவன்-க, ஆக-சு, படிகமலையைப்போலு மாத்மா, படிகமலைக் கொளியைப்போலும், ஆத்மஞானம் படிகமலை யொளிக்குப் பற்றுங் குணத்தைப்போலும் ஆத்மஞானத்திற் கறியுங் குணம் படிகமலை யொளிக்குப் பற்றுந்தொழில் போலும், ஆத்மஞானத்திற் கறியுந்தொழில் வர்ணத்தைப்போலும் மாயாசரீரம், வர்ணத்தைக் காண்பிக்கிறவனைப் போலும் சிவன் படிகமலையானது எந்தப்புரத்திலே வர்ணத்தைக்கொடுத்தாலும் பற்றிக்கொள்ளும் அதுபோல எல்லாப் புவனங்களிலும் வியாபகமாயிருக்கிற ஆத்மா கர்த்தா எந்தப்புவனத்திலே சரீரத்தைக் கொடுத்தாலும் அந்தப்புவனத்திலே பற்றிக்கொள்ளும், அக்கினிமலை-க, அக்கினிமலைக்கொளி-க, அக்கினிமலைக்குச் சுடுங்குணம்-க, அக்கினிமலைக்குச் சுடுந்தொழில்-க, பஞ்சு-க, பஞ்சைப்பற்றி விக்கிறவன்-க,

ஆக-சு, அக்கினிமலையானது எந்தப்புரத்திலே பஞ்சைக்கொடுத்தாலும் பற்றிக்கொள்ளும் அதுபோல யெல்லாப் புவனங்களிலும் வியாபகமாயிருக்கிற ஆத்மா கர்த்தர் எந்தப்புவனத்திலே சரீரத்தைக்கொடுத்தாலும் அந்தப்புவனத்திலே பற்றிக்கொள்ளும். (உரு)

ஆத்மா சார்ந்ததின் வண்ணமா யிருக்கு மென்பதற்கு ஆகாயமுதலிய வுவமைகள் வருமாறு:—ஆகாயமானது இருளோடே கூடினலிருளாயிருக்கும் ஒளியோடே கூடினலொளியாயிருக்கும் அதுபோல ஆத்மா மலத்தோடே கூடினல் மலமாய் நிற்கும் சிவத்தோடே கூடினல் சிவமாயிருக்கும். (உசு)

எண்ணிறந்தகோடி புவனங்களிலே யிருக்கிற எண்ணிறந்தகோடி ஆத்மாக்களும் அறியுந் தொழிலு நடத்தலினலே சிவன் வியாபகரென்றறிக. (உஎ)

எண்ணிறந்தகோடி ஆத்மாக்களுக்கும் அறியாமை யிருக்கையினலே ஆணவமலம் வியாபக மென்றறிக. (உஅ)

எண்ணிறந்தகோடி ஆத்மாக்களுக்கும் எண்ணிறந்தகோடி புவனங்களிலே தனுகரணதிகளிருக்கையினலே மாயை வியாபக மென்றறிக. (உகூ)

எண்ணிறந்தகோடி ஆத்மாக்களுக்கும் எண்ணிறந்தகோடிபுவனங்களிலே புசிப்பிருக்கையினலே கன்மம் வியாபகமென்றறிக. (௩0)

எண்ணிறந்தகோடி ஆத்மாக்களுக்குச் சிவனொருவனுயிருந்து அறிவிக்கிறதெப்படியென்னில்; எண்ணிறந்தகோடி கண்களுக்கும் ஆதித்தனொருவனுக யிருந்து காட்டுதல் போலும். (௯௧)

எண்ணிறந்தகோடி ஆத்மாக்களையும் மல மொன்றுயிருந்து மறைக்கிறதெப்படியென்னில; எண்ணிறந்தகோடி கண்களையும் இருளொன்றுயிருந்து மறைத்தல்போல. (௯௨)

எண்ணிறந்தகோடி ஆத்மாக்களுக்கு எண்ணிறந்த கோடி கன்மங்களையுஞ் சிவன்ஒருவரா யிருந்தறிந்து கூட்டிமுடிப்பிக்கிறதெப்படி யென்னில்; ஒருவண்ணானவன் ஒருவூரிலே யிருக்கிற பலபேருடைய புடவையையும் வாங்கிவெளுத்து அவரவர்புடவையை அவரவர்க்கறிந்து எடுத்துக்கொடுத்தல் போலும், ஒரு இடையனவன் பலபேருடையமாட்டையும் மேய்த்து அவரவர்வீட்டிலே யறிந்து கொணடுபோய்விடுத்தல் போலும். (௯௩)

வினைவேறே, கன்மம்வேறே, வினையானது அனுதியிலே ஆணவமலத்தினலே ஆத்மாவுச்குக்கன்மத்திலே யுண்டாகியவிருப்பம். கன்மமாவது? புண்ணியபாவங்கள். இதற்குவசனம் தேவாரம் "அல்லலென்செய்யு மருவினையென்செய்யுந் தொல்லை வல்வினைத்தொண்டன்றுனென்செய்யும்" மென்றது. (௯௪)

கன்மமாவது? தூலகன்மமென்றுஞ் சூக்குமகன்மமென்றும் அதிசூக்குமகனமமென்றும் மூன்றுவிதமாகவிருக்கும். தூலகன்மமவது? ஆகாமியம். ஆகாமியமாவது? ஆத்மா பிராரத்துவம் புசிக்கை

யிலே நிகழாநின்ற இதாகிதங்கள். இதாகிதங்களாவன? மனோ வாக்குக்காயங்களினாலே செய்யப்பட்ட நல்லதொழிலுந் தீயதொழிலுமாம். சூக்குமகன்மமாவது? சஞ்சிதம். சஞ்சிதமாவது? மாயையிலே கட்டுக்கிடையாகிய புண்ணியபாவங்கள். அதி சூக்குமகன்மமாவது? பிராரத்தம். பிராரத்தமாவது? எடுத்ததேகத்திலே புசித்துத் தொலைவதாகிய சுகதுக்கங்கள். சுகதுக்கங்களுக்கிருப்பிடமாவது? சத்தம் பரிசம் ரூபம் ரசம் கந்தம் ஆகியவிடயங்கள். இந்தவிடயமும்; விருப்புச்சத்தம் வெறுப்புச்சத்தம் விருப்புப்பரிசம் வெறுப்புப்பரிசம் விருப்புரூபம் வெறுப்புரூபம் விருப்புரசம் வெறுப்புரசம் விருப்புகந்தம் வெறுப்புகந்தமென்று பத்துவிதமாயிருக்கும். (௩௫)

ஆத்மாவினுடைய பிராரத்தகன்மத்தைச்சிவனும் அறிவார், ஆத்மாவும் அறிவான், இரண்டுஞ்சரியோவென்றால்; அச்சிவனறிகிறது மாத்திரம். ஆத்மாவறிந்தழுந்துவான். (௩௬)

ஆத்மாபிராரத்தம் புசித்தற்குச் சிவன் நல்வினைதீவினையிரண்டையுங்கருவியாகக்கூட்டினார் கூட்டினதொழிலை ஆத்மா மலத்தினாலே தன்னுடையதொழிலாக நினைத்துக்கொண்டான் ஆகையினாலே அந்தவிரண்டுதொழிலும் ஆத்மாவுக்கு ஆகாமியமாயிற்று. (௩௭)

கன்மமாவது? சாதி யாயுடைய போகமென மூன்றுவிதமாயிருக்கும் இவை மூன்றும் நல்லசாதி தீயசாதி யெனவுந் தீர்க்காயுசு அற்பாயுசுஎனவும் வெகுபோகமெனவும் அற்பபோகமெனவும் ஆறுவிதமாயிருக்கும். (௩௮)

ஆத்மாவுக்கு முன்னூர்ச்சித்தகன்மம்பின்னும் பின்னூர்ச்சித்தகன்மம்முன்னுமாக மாறிவரும் அதெப்படியென்னில்; ஒருவன்பனைவிதையை மண்ணிலே முன்னேபோட்டுத் தண்ணீர்விட்டான் அதன்பின்னே தென்னம் பிள்ளையைவைத்தான் அதன்பின்னே கத்திரிநட்டான் அதன்பின்னே கீரைவிதைத்தான் அவனுக்குக்கீரைபதினைந்து நாளிலே பலனய்வரும் கத்திரி ஒருமாதத்திலே பலனய்வரும், தென்னம்பிள்ளைஅஞ்சு வருஷத்திலே பலனய்வரும் பனைமுப்பது வருஷத்திலேபலனய்வரும் அதுபோலக் கன்மமும் மென்மைவன்மைகட்கீடாகப்பாகப்பட்டுமாறிப்பலனய்வரும். இதற்குவசனஞ் சிவப்பிரகாசத்தில் "துட்டங்கடைவீனடையாதே தோன்றுமாறி" என்றது. (௩௯)

ஆத்மாவுக்குப் பிராரத்தகன்மம் வருமிடத்து தெய்வீகம் பௌதிகம் ஆத்மீகமென்று மூன்றுவிதமாகவரும் அவற்றுள் தெய்வீகமாவது? செனனமரணம் நரைதிரைகள் முதலாயின கர்த்தாவினல்வருவது. பௌதிக மாவது? மின்னல் இடி காற்று மழை முதலாயினவற்றல் வருவது. ஆத்மீகமாவது ? ஆத்மாக்களால்வருவது. இப்படிவரும் பிராரத்தந் தானிச்சைப்பட்டுவருகிறதுமுண்டு தானிச்சைப்படாமல் வருகிறதுமுண்டு தானிச்சைப்படாமல் அனிச்சையாகவருவதுமுண்டு. (௪௦)

மாயாகாரியத்திலே போகமென்று சொன்னது லட்சணையாகப்பொருள் கொள்க கன்மலட்சணத்திலே போகமென்றது சுபாவமாகிய சுகதுக்கம். (௪௧)

ஆத்மாக்களுக்குக் கன்மம் ஆற்சிப்புக்கேவலாவவத்தையி ல்லாமல் சகலாவவத்தையிலே கூடாது சகலாவவத்தையிலே ஆ ற்சிப்பானுகில் சிவன்பேரிலே தோஷம்வரும் ஆனையினுலே ச கலாவவத்தையிலே ஆத்மாக்களுக்கு ஆற்சிப்பில்லை ஆணவமலமா னது இராக்காலம்போலும் கேவலம்விருள் போலுங் கேவலத் திற்குப்பொருள்மறைப்பு. (சஉ)

ஆத்மாவுக்குக் கேவல சகல சுத்தமென மூன்றவ்வத்தையுண் டு அவற்றுட்கேவலமாவது? காரணகேவலமென்றுங் காரியகேவ லமென்றும் இருவகைப்படும். அவற்றுட் காரணகேவலமாவது? அ னுதியைத்தொடுத்து மோக்ஷபரியந்தமுள்ள எண்ணிறந்த சிருட் டி ஆத்மா வறிவுகெடாமல் ஆணவமலத்திலே யழுந்திக் கிடத்தல். எப்படியென்னில்; கண்ணனது இராக்காலத்திருளிலே ஒளிகெடா மல் விழித்திருத்தல்போலும். காரியகேவலமானது? அறிகருவிக ணீங்கிச் சாக்கிரமுதலஞ்சவத்தைப் படுதல். காரணசகலமாவது? அனுதி சிருஷ்டி காலங்களிலேயுண்டாகிய மாயாசரீரங்களை ப்பற்றி முப்பத்தாறு தத்துவங்களையும் பொருந்தி நின்று சுக துக்கங்களை யறிதல். எபபடியென்னில்; இராக்காலத் திருளிலேய ழுந்திக் கிடந்தகண்ணனது விளக்கினுலே யிருள்நீங்கிப் பலபதா ர்த்தங்களைகாண்டல்போலுங், காரியசகல மாவது? லலாடத் தா னத்திலே தானே துரியாதீத முதல் சாக்கிர மீருசவுள்ள மத் தியா லவத்தை யைந்தையு மடைதல். காரணசுத்தமாவது? ஆத் மாபஞ்சமலங்களையும் நீங்கி அருளைப்பொருந்திச் சிவானந்தத் தையநுபவித்தல். எப்படியென்னில்; இராக்காலத்திலேயிருளோடும் விளக்கோடுங் கூடியிருந்தகண்ணனது ஆதித்தன் உதையஞ்செ

ய்த விடத்து இராக்காலத்தையும் இருளையும் விளக்கையும் விட்டுநீங்கி ஆதித்தகிரணத்தினாலே ஆதித்தனைக்காண்டற் போலும். காரியசுத்தமாவது? நின்மலசாக்கிரமுதல் ஐந்தவத்தையுமாம். (சகூ) மலநிவர்த்திக்குக் காரணமாவது? அநாதிசிருட்டி தொடுத்து மோக்ஷபரியந்தம் ஆத்மாவாலுண்டாகிய சிவபுண்ணியங்களாம். சிவபுண்ணியங்களாவன? புத்திபூர்வ சிவபுண்ணியம் அபுத்திபூர்வசிவபுண்ணியம். உபாயச்சரிதை உபாயக்கிரியை உபாயயோகம் உபாயஞானம், உண்மைச்சரிதை உண்மைக்கிரியை உண்மையோகம் உண்மைஞானம் என்றுபத்துவிதமாயிருக்கும். இந்தப்பத்தில் மூந்தியவொன்பதும்மலநீக்கிலே, பின்சொன்ன உண்மைஞானமொன்றும்சிவபுண்ணியமொன்றும் அருணிலே, அந்தஉண்மைஞானமொன்றும்; தத்துவரூபம், தத்துவதரிசனம், தத்துவசுத்தி, ஆத்மரூபம், ஆத்மதரிசனம், ஆத்மசுத்தி, சிவரூபம், சிவதரிசனம், சிவயோகம், சிவபோகமென்று பத்துவிதமாயிருக்கும், இந்தப்பத்தையுஞ் சுத்தாவத்தையின் காரியமாகிய நின்மலசாக்கிரமுதல் ஐந்தவத்தையிலடக்கி ஆசாரியர் பக்குவனான சீடனுக்கு நிருவாண தீட்சையைப்பண்ணி யறிவிப்பார். இந்தப்பத்தும் நின்மல சாக்கிரமுதல் ஐந்தவத்தையில் அடங்கு முறைமையாவது? தத்துவரூபந் தத்துவதரிசனம் தத்துவசுத்தி ஆத்மரூப மாகிய நான்கும் நின்மலசாக்கிரத்திலடங்கும். ஆத்மதரிசனமுஞ் சிவரூபமும் நின்மலசொற்பனத்தி லடங்கும். நின்மல சுழுத்தியில் தேசகாலாதியாயங்குவதொன்றுமில்லை. ஆத்மா அருள் செய்யும்பஞ்சகிருத்தியத்தை யான்செய்வேனென்றுகருதல் மாத்திரம் ஆத்மசுத்தியுஞ் சிவ

தரிசனமுஞ் சிவயோகமுமாம் அவைகள் நின்மல துரியத்திலடங்கும். சிவபோகமொன்றும் நின்மலதுரியாதீதத்திலடங்கும். (௪௪)

தத்துவரூபமாவது? முப்பத்தாறு தத்துவங்ககளுடையதொழிலையறிதல். தத்துவதரிசனமாவது? முப்பத்தாறு தத்துவங்களையுஞ்சடனென்றறிதல். தத்துவசுத்தியாவது? மும்பத்தாறுதத்துவங்களையுஞ்சிவஞானத்தினலே தனக்குஅன்னியமென்றறிந்து நீங்குதல். ஆத்மரூபமாவது? பஞ்சமலங்களையும்நீங்கி ஆத்மாவைப் பிரமமென்று கருதுதல். ஆத்மதரிசனமாவது? தனக்கொருசெய்தியுமில்லை என்றறிந்து நிற்றல். ஆத்மசுத்தியாவது? ஆத்மசிவஞானத்திலே போயழுந்தித் தான்றேன்றுமல் அந்தச்சிவஞானமாய்ப் போதல். சிவரூபமாவது? ஆணவமலத்திலே கிடக்கிற ஆத்மாவைச் சிவன் பஞ்சகிருத்தியங்களைச்செய்து மலங்களைநீக்கி மோட்சத்திலே விடுவரெனத் திடமாயறிதல். சிவ தரிசனமாவது ? சிவஞானஞ் செய்யும் பஞ்சகிருத்தியத்தை ஆத்மா செய்யமாட்டானென்றறிந்து திருவருளோடு அழுந்தாதுசேர்தல். சிவயோகமாவது? சிவசத்திசெய்யுங் கிருத்தியமெல்லாமுஞ் சிவனுக்குச்சற்றுமில்லை யென்றறிந்து சிவசத்தியன்றித் தனக்கும்பிறர்க்குஞ்சற்றுஞ்செய்தியில்லை யென்றறிந்து தெரிந்து திருவருளோடு அழுந்தியதுவாய்ப்போதல். சிவயோகமாவது? ஆத்மா சிவானந்தத்தைப்புசித்தல். (௪௫)

சிவஞானபோதத்தில் இரண்டாஞ் சூத்திரத்தில் தத்துவரூபமொன்றுஞ் சொல்லப்பட்டது, ஐந்தில் தத்துவதரிசனமும், ஆறில் தத்துவசுத்தியும், ஏழில் ஆத்மரூபமும், எட்டில் ஆத்ம தரிசனமுஞ்

சிவரூபமும், ஒன்பதில் பத்தில் ஆத்மசுத்தியுஞ், சிவதரிசனமுஞ், சிவயோகமுஞ், பதினொன்றில் அச்சிவ போகமுஞ் சொல்லியிருக்கிறது. (சசு)

சிவஞானபோதம் முதற்சூத்திரத்தில் சங்காரகர்த்தாவே முதன்மையான கர்த்தாவென்றுசொன்னது, இரண்டிலே மலமுங்கன்மும் மாயையும் ஆத்மாவும் சிவனும் ஆகிய வைந்துபொருளும் அத்விதமாய் இருக்குமென்றது. மூன்றி லனுமானத்தினாலே ஆத்மாவுண்டென்று சாதித்தது. நான்கில் ஆத்மாவுக்கனாதியிலே கேவல சகல சுத்த மென்று மூன்றவத்தையு முண்டென்று சொன்னது. ஐந்தில் ஆத்மா தன்னைப்பிரமமென்றுகருத லல்லவென்றுமறுத்தது. ஆறில் சத்து மசத்தும் பகுத்துச் சொன்னது ஏழில் ஆத்மவிலக்கணமும் முன்சொன்ன சத்தசத்திற்குப்புற னடையுஞ்சொன்னது. எட்டில் சிவஞானத்தையறியும் முறைமையைச் சொன்னது. ஒன்பதில் ஆத்மசுத்திசொன்னது. பத்தில் பாசஜயஞ் சொன்னது. பதினொன்றில் பரமேசுரன் சீபாதங்களை யணையும் முறைமையைச்சொன்னது. பனிரெண்டில் மனோவாக்குக்காயங் களினாலே அறியப்படாதசிவனை மனோவாக்குக் காயங்களினாலே யறிந்து வழிபடும் முறைமையைச்சொன்னது. (சஎ)

ஞானவானுக்கு பிராரத்தகன்ம மில்லையென்பதற்குப் பழைய மணியகாரன் முதலியவுவமைகள்வருமாறு:—ஒருவன் ஒரு ஊரிலே வெகுநாள்மணியம் பண்ணிக்கொண்டிருந்து வேண்டியநெற்களும் வாழைகளும் கரும்பு முதலிய புன்பயிர்களும் உண்டாக்

டிக்கொண்டு இருக்கும் நாளையிலே மணியமாறிப் புதுமணியகாரன் வந்தான் வந்தவிடத்திலே பழையமணியகாரனாலே உழக்குநெல் கொடுக்கப்படாது. ஒரு இலையும் அறுக்கப்படாது. பழையமணியகாரனைப் போலும் ஆத்மா, புது மணியகாரனைப் போலுஞ் சிவன், ஊரைப்போலுஞ் சரீரம், பதார்த்தங் களைப்போலும் பிராரத்தம். (சஅ)

அச்சிவ னாதி கேவலத்திலே கிடக்கிற ஆத்மாவை அநாதி சிருட்டி செய்கிறகாலத்திலே தான் தலமாகவுந் தீர்த்தமாகவும் மூர்த்தியாகவும் இருந்து திருமேனி கொண்டு ஆத்மாக்களுக்குச் சிவபுண்ணியங்களைக் கொடுப்பார். அது எப்படியென்னில்; சிவஸ்தலத்திலே புல் முதலான சரீரங்களாய்ச் செனித்தாலும் வசித்தாலும் மரித்தாலுஞ் சிவபுண்ணியத்தைக்கொடுப்பர். தீர்த்தத்திலே மீன்முதலானவைசெனித்தாலும் வசித்தாலும் மரித்தாலும், மனுஷர்முதலாயினவர்கள் முழுகினாலும் குடித்தாலும் திவலை தெறித்தாலும் அந்தத் தீர்த்தம்பாய்ந்து விளைந்தநெல்முதலாகிய பதார்த்தங்களைப் பறவை முதலானவைகள் புசித்தாலுஞ் சிவபுண்ணியமுண்டாம். சிவலிங்கத்திலே செய்யும் அர்ச்சனைஅபிடேகம் நைவேத்தியம்முதலாயினவைக்குரித்தாகிய விருட்சங்களாகவும் நெல்முதலான பயிர்களாகவும் பசு முதலானமிருகங்களாகவும் பணிவிடைக்குரிய சரீரங்களாகவுஞ்செனிப்பித்துச் சிவபுண்ணியங்களைக்கொடுப்பர். (சக)

விஞ்ஞானகலருக்கு ஆணவமலமொன்றமேபந்தம்; கருமமுமாயையும் இல்லாதிருந்தால் பந்தம் நீங்காது ஆகையினாலே

சுத்தகன்மமுஞ்சுத்தமாயாதனுவுமுண்டு அப்படிவுண்டா யிருக்கையி லுமில்லையென்றது அந்தவிரண்டினாலும் அவர்களுக்கு மயக்கமின் மையின். (ரு0)

பிரளயாகலருக்கு ஆணவமலமுங் கன்மமேபந்தம்; சரீ ரம் இல்லாதிருந்தாற் கன்மம் புசிக்கப்படா தாகையினாலே அ சுத்த மாயாதனு வுண்டு அப்படி யுண்டாயிருக்கையிலு மில்லையெ ன்றது அவர்களுக்கதினாலே மயக்கமின்மையின். (ருக)

கருமபரிபாக நடையாவது? சரீரப் பற்றுவிடாமல் வே தாகமங்களை யோதியுணர்ந் தறுதியிட்டறிந்து நித்தியகன்மவனு ட்டானங்களை வழுவா தனுட்டித்தல். (ருஉ)

மலபரிபாகி நடையாவது? சரீரப்பற்றுவிட்டு ஞான சா ஸ்திரங்களை யோதிக் கேட்டல் சிந்தித்தல் தெளிநிலையடைந்து நிட்டையைப் பொருந்துதல். (ருங)

ஞானவான்களுக்குத் தேகம்விழுதலாவது? தத்துவசுத்திப் படுதல். (ருச)

ஞானவானுக்கு அந்திட்டியாவது ? சிவஞானத்தினாலே யடைந்த சுத்தாவத்தையையுஞ் சிவஞானத்தையையும் நீங்கிச் சிவானந்தத்திலே யழுந்துதல். (ருரு)

சிவன் சத்தியோடு கூடினாற் பிரபஞ்சமுண்டாம், சத்திசி வத்தோடு கூடினாற் பிரபஞ்ச மொடுங்கும், ஆத்மா ஆத்மபோ தத்திற் கூடினால் பிரபஞ்சமுண்டாம், ஆத்மபோதம் ஆத்மாவி லொடுங்கினால் பிரபஞ்சமும் ஒடுங்கும். (ருசு)

ஆத்மாவுக்கு மலப்பிணியினலே சரீரமுண்டானது, சிவனுக்கு ஆத்மாவினுடைய மலப்பிணியைத் தீர்க்குந்திறமையுண்டாகையினலேதிருமேனியுண்டானது, ஆத்மாவினுடைய மலப்பிணியைத் தீர்க்கும்மருந்தாவது? அந்த ஆத்மா தன்னுடைய பிராரத்தத்தைத்தானே சிவனுக்குக்கொடுத்தாற் றன்னுடைய மலப்பிணிநீங்கும் ஆத்மா பிராரத்தத்தைத்தானே புசித்தால் மலப்பிணி நீங்காது. (ருஎ)

சரீரத்திரிபாவது? பாம்பு சட்டை கழற்றினற்போல ஸ்தூல தேகத்தைவிட்டு நீங்கிச் சூக்கும தேகத்தோடு பூதசரீரத்தையும் பூதசாரசரீரத்தையும் பொருந்துதல், புண்ணியபாவ சேஷங்களினலே பூதபரிணமசரீரத்தைப் பொருந்துதலுமாம். இடத்திரிபாவது? முட்டையிலே இருந்தபுள்ளானது முட்டையைவிட்டு நீங்கிக் கொம்பிலே இருத்தல்போல ஆத்மா ஸ்தூல தேகத்தைவிட்டு நீங்கிச் சூக்குமதேகத்தோடு பூதசரீரத்தைப் பொருந்தி நரகத்திலே செல்லும், பூதசாரசரீரத்திலே பொருந்திச் சுவர்க்கத்திலே செல்லுதலுமாம். பூதபரிணம சரீரத்தைப்பொருந்தி மீளவுந்தரையினிடத்திலே செல்லுதலுமாம். (ருஅ)

அறிவிற்றிரிபாவது? நினைவிலேயறிந்த செய்தியெல்லாம் கனவிலே மறந்தாற்போல் ஆத்மாஸ்தூல தேகத்திலே யறிந்த செய்தியெல்லாம் ஸ்தூலதேகத்தைவிட்டு நீங்கி பூதசரீரத்தையும் பூதசாரசரீரத்தையும் பொருந்தி நரகசொர்க்கங்களை யடைந்தபோது மறந்தொன்றுந் தெரியாதிருத்தல், (ருகூ)

ஆத்மாவுக்கும் எல்லாவற்றிற்கும் முந்தினது பக்குவம், அதற்குப்பிந்தினது சிவபுண்ணியம், அதன்பின்பு மலபரிபாகம் சத்தினிபாதம் யிருவினையொப்பு ஆசாரியர் திருமேனிகொண்டெழுந்தருளி வருதல் அவர்திருவுளம்பற்றுநின்ற ஞானசாஸ்த்திரம், இவை மோட்சமடைதற் கேதுவாகிய முறைமை யென்றறிக. (௬௦)

காரிய கேவலமாவது? நித்தியங் கருவிகணீங்கி நித்திரை கொள்ளுதல். காரண சகலமாவது? அனாதிகேவலத்தி லழுந்திக் கிடந்த ஆத்மா மாயா கருவிகளினாலே மறைப்புநீங்கிச் சத்தாதி விடயங்களையறிதல். நிருவாண தீட்சையிரண்டு விதமாயிருக்கும். அதெப்படியென்னில்; சத்தியநிருவாணமென்றும், அசத்தியநிருவாணமென்றுமிருவிதமாம். அவற்றுள்சத்தியநிருவாணமாவது? சீடனுக்கறிவித்தாலறியுந்தன்மை யில்லாதபடியினாலேஆத்மாவையும் அறிவியாமற்றிட்சையினாலே அவற்றைநீக்குதல். அசத்தியநிருவாணமாவது? அறிவித்தாலறியும் தன்மையையுடையசீடனுக்கு ஆத்மாவையுமறிந்தவற்றை நீக்குதல். சிவனுடைய வியாபகத்திலே சிவசத்தி வியாப்பியம். சிவசத்தியிலே ஆத்மாவும் மலமும் வியாப்பியம். மலத்திலே மலசத்திவியாப்பியம். ஆத்ம போதத்திலே மாயைவியாப்பியம். மாயையிலே மாயாகாரியம் வியாப்பியம், மாயாகாரியத்திலே கன்மம்வியாப்பியம். கன்மத்திலே கன்மகாரியம்வியாப்பியம். ஆத்மாவுக்குப் புசிப்பாவது? சிவானந்தத்தை யநுபவித்தல். சிவனுக்குப் புசிப்பாவது? ஞானவான்களுடைய பிராரத்துவம். ஆத்மாவுக்கு

லயத்தானங் கேவலாவவத்தை, போகத்தானஞ்சுத்தாவவத்தை, அதிகாரத்தானஞ்சகலாவவத்தை, இவையிரண்டு விதமாயிருக்கும். அவை சுத்தகேவலம், அசுத்தகேவலம், சுத்தசகலம், அசுத்தசகலம், சுத்தாசுத்தம், அசுத்தாசுத்தம், என ஆறும் அசுத்தகேவலமாவது? ஆணவமாதாரமாக மூலாதாரத்திலே கிடத்தல். சுத்தகேவலமாவது? இன்பசத்தியின்கைப்பட்டிருத்தல். அசுத்தசகலமாவது? மாயாகாரியமானதேகத்திலே கூடி பிரத்திரியப் புசிப்பால் மேலைக்கு வினைதேடல். சுத்தசகலமாவது? அருள்வடிவாய்நின்று செனனவொழிவுக்குபாயந்தேடல். அசுத்தாசுத்தமாவது? சுத்தமாயையின் கைப்பட்டிருத்தல். சுத்தாசுத்தமாவது? இன்பாதீதமாய்க் கிடத்தல். தேகபந்தமான ஆத்மாவுக்கு முப்பத்தாறு தத்துவங்களும் போகபூமியென்று கொள்ளுதல் வருமாறு:—பிறவாமுதல்வன் பிறந்தானென்றும், உணர்வாய் நின்ற ஞானக் கூத்தனொரு மூர்த்தி கொடுகுறுகியென்றும், முன்னமீட்டியதவத்தினாலே யிறைவரும் மன்னுமருட்குருவாகிவந்தென்றும், இப்படிச் சாஸ்திரங்களிலேகர்த்தாத்தானே ஆசாரிய மூர்த்தமாய் திருமேனி கர்த்தா ஞானவான்களுக்குக் குருலிங்கம் முண்டானாற்போலப்பெத்தாத்மாக்களுக்குக் குருலிங்கசங்கமுண்டு. அதேதென்னில்; பெண்டீர்பிள்ளை லிங்கம். சுத்தத்தார் சங்கமம். சிவனுக்கு அழியாத்திருமேனி ஆத்மாவேயாம். சிவலிங்கம் விக்கிரகம் முதலான திரு மேனிகள் சர்வசங்கார காலத்திலும் நீங்காது. பரமேசுரன் திருமேனிகொள்ளாவிட்டால் பஞ்ச கிருத்திய முண்டாகமாட்டாது. பிரம விட்டுணுமுதலான தேவர்களுக்கும், நரகர்க்கும், வேதாகமங்களை யறிவிப்பாருமில்லை. இம்மூவர்

களுக்குங் குருசந்தானதொடர்ச்சியு முண்டாகமாட்டாது. குருவானவர் குண்டமண்டலாதிகளாற் பாசத்தைக்கும் தீட்சைகளு முண்டாகமாட்டாது. ஆகையினாலே சர்த்தா திருமேனிகொண்டு வருவாரென்பதற்கு வசனம் "உருமேனி தரித்துக்கொண்" டென்கிறபாட்டு. "உருவருள் குணங்க" ளென்கிற பாட்டும். பரமேசுரன் திருமேனி கொண்டுவாராரென்பதற்குவசனம் 'சிவனுருவருவமல்ல' னென்ற திருவிருத்தம். பரமேசுரனானவர் பிரமமா விஷ்ணு ருத்திரன் மகேஸ்வரனாகிய நான்கு ரூபமுமாகான். பரவிந்து பரநாதம் அபரவிந்து அபரநாத மென்னும் நான்கு ரூபமுமாகான். சதாசிவரு மென்னும் ரூபா ரூபமு மாகான். இந்த ஒன்பது ரூபத்திலும் வியாபகத்தினாலே பொருந்தியிருந்தாலும் அவற்றைப்பொருந்தாதவன் யாவனென்றறிக. உண்மைச்சரிதைக்குச் சிதநியாரிற்ருத மார்க்கம். உண்மைக்கிரியைக்குப் புத்திரமார்க்கம் உண்மை யோகத்திற்குச் சகமார்க்கம். உண்மை ஞானத்திற்குச் சன்மார்க்கம். சகலகலையென்ற திருவிருத்தங்களிலறிக. சிவஞானம் ஒன்றினாலே அறிகிறதேயல்லாமல் மற்ற ஞானங்களொன்றினாலேயுஞ் சிவனை யொருக்காலும் அறியக்கூடாது. பக்குவாத்துமாவுக்கு ஞானசரித்திரத்தைத்தானே படித்தால் ஞானம் விளங்காது, ஞானாசாரியார் சீடனுடைய பக்குவமறிந்து ஞானசாஸ்திரத்தைப் போதித்தால் ஞானம் விளங்கும், அதெப்படிப் போல வென்றால்; தண்ணீர்த்தாக முடையவன் சமுத்திரத்துத் தண்ணீரைத் தானேகுடித்தாற் றாகந்தீராது மேகமானது சமுத்திரத்துத்தண்ணீரைப்பருகி யுவ

ரையெல்லாமகற்றித் தண்ணீரைக்கொடுத்தாற் றாகந்தீரும். ஆதலாற் றண்ணீர்த்தாக முடையவனைப்போலும் ஆத்மா. சமுத்திரசலத்தைப் போலும்ஞானசாஸ்திரம். மேகத்தைப்போலும் ஞானசாரியர். மோக்ஷகாமியானவன் ஆத்மாவுக்குள்ளே யிருக்கிற சிவனை சிவபத்தியினாலும்,சிவஞானத்தினாலும், வெளிப்படுத்தல்வேண்டும். அஃதெப்படிப்போல வென்றால்; காட்டத்திலே யிருக்கிறவக்கினியை பாணியினாலும் கயிற்றினாலும் சுற்றிக்கடைந்து வெளிப்படுத்தல்போலும் தயிரிலே யிருக்கிற நெய்யை மற்றை நாட்டிக் கயிற்றைச்சுத்திக் கடைந்து வெளிப்படுத்தல் போலுமாம்.

சித்தாந்தமரபட்டவணை.

முற்றுப்பெற்றது.

---

திருச்சிற்றம்பலம்.

